வென்றிகொ ளிலங்கை யான வியனகர்க் கணிய ஞறை
னன்றவன் சூரற் காண வனிகமோ டகன்று னன்றே. (எ)

அங்கவன் றனது மைந்த னுயிர வெள்ள மான
துங்கவெம் படையி ஞேடுந் துலங்கதி வீர னென்போன்
றங்கினன் வடாது வாச றன்னிடை மன்னி வீர
சிங்கனுந் நூறு வெள்ளஞ் சேனையோ டிருந்தான் மாதோ. (அ)

கண்டனன் வீர வாகு ககனமேல் வருதல் சீற்றங்
கொண்டன னெமது காப்பிற் குறுகின னிவன்ற னுவி
யுண்டிடு வேனென் றெண்ணி யுரந்தரு மடங்கற் பேரோன்
மண்டிய படையி ஞேடு மாகமேல் வளைந்து கொண்டான். (௯)

உற்றசீர் வீர வாகு வுறைகழித் தொளிர்வாள் கொண்டு
செற்றவெங் கரிக ளூடு சீயமொன் றடைந்த வாபோற்
றறறிவந் தெதிர்ந்து போர்செய் தண்டமுந் தலைவன் ருனு
மற்றிடக் கடிது லாவி யறுத்தனன் செறுத்து மன்னே. (௧0)

மின்னுலாந் தனிவாள் கொண்டு வீறிவந் தெதிர்ந்து சூழ்ந்த
மன்னிலா வெயிற்றுப் பேழ்வாய் வன்மைசே ரவுணற் செற்ற
பொன்னுலா மலங்கற் றிண்டோட் பொருவிலா வீர வீரன்
கொன்னுலா மிலங்கை யென்னுங் குன்றின்மேற் குப்புற் றுனுல்.()

வேறு.

குப்புற் றிடுதலு மதுதன் புடையுறு கொடுவென் றருவர்க ளொடுதாழா, வுப்புற் றிடுகடல் புகவே யவனுறை யொருவா விரு விற லதிவீரன், றுப்புற் றிடுபடை யொடுவந் தடலொடு சூழத் தன தொரு சுடர்வாள்கொண், டப்புக் கடலென வுதிரம் பெருகிட வட் டா னவர்தமை யடல்வீரன். (௧௨)

பேரா விறன்மலை கடன்மே லெழும்வகை பின்விண் ணிடையி னெழுந்தேகிச், சீரார் சூரர்பகை நகரத் திடைவட திசைவாய் தலி னுற வதிகோர, வீரா தியனவ னுரு யிர்மெனும் வெள்ளப் படை யொடு மூறவேகண், டேராக் கரிமுக னிளையோ னிளையவ னிவ்வா றுரையது செய்வானுல். (௧௩)

வற்று துறுகட லெனவிக் கவுணர்கண் மருவுந் றணர்மிக வாய்தற்பா, லுற்று லவர்பொர வருவா ரவர்தமை யொழியப் பொரு

திடி லொழியாதே, செற்றார் வருகுவ ரவர்தங் களையடல் செய்தற் கரிதது செய்தாலுஞ், சுற்று நிறைவுறு திறல்வெம் படையொடு சூரன் சமர்செய வருவானால். (௧௪)

ஆதிக் குகனவ னழியப் பொருதிட லல்லா தெவரட வல்லா ரென், றோதிக் குணதிசை வாய்தற் றனில்வள ருரமே வியபுய னுறு போதின், மேதிக் கணனொடு மாதிக் கதனிடை வீரத் தினகரன் வடதிக்கா, ரேதப் படைநிக ரனிகஞ் சுலவவி ருந்தா ரிருவர் தெரிந் தானே. (௧௫)

பேரா விறலுறு வீரா திபனது பின்றென் றிசைவழி பெயர் போதிற், சூரா னவனது நகர்மேல் வெளிமிசை தோய்வோ னமர் புரி தொழில்வல்லோ, னோரா யிரமுக மீரா யிரமெனு மொண் கைக் கயமுக வசுரன்றான், பாரா விவனுயி ருண்பே னெனவெதிர் படவந் தனனிது பயில்கின்றான். (௧௬)

வீறு மொருகிரி பறியா மிடலொடு விடவே வளர்புய மிஞ்ச பட்டே, நீறு யதுதச நாறு மலைவிட நிமலன் றிருவுரு நிலைமேவி, வேறு யாவறு துகளா யினகதிர் மிகுவே லிறையவ னிளையோ னுட், சீறு மினிரொளி வாள்கொண் டவனெதிர் சென்று னடுதிறல் குன்றுதான். (௧௭)

வாள்கொண் டிடுநெடு வாள்கொண் டவன்முக வண்கைத் திர ளினை வலிமேவுந், தோள்கொண் டிடுமிறை தடியக் குகன்விடு தூதன் றனையிரு தசநாறு, நீள்கொண் டிடுகர மேகொண் டடலுட னேசுற் றிடவவை நிலமீதே, வீள்கொண் டிடும்வகை வாள்கொண் டடலொடு வெட்டா வழிவுசெய் திட்டானால். (௧௮)

துன்றும் கரநிரை தரைமேல் விழவமர் தோளான் முயறலு நீளாகத், தொன்றும் படியொரு சரணு லவனை யுதைத்தே கடிதில் வதைத்தேமுற், பொன்றும் படிசம னூரமீ தரமொடு புவியூடுதை புரி புனிதன்போற், கொன்றுன் றியவிறல் மொய்ம்பன் மகிழ்வது கொண்டா னமரர்கள் கொண்டாட. (௧௯)

வேறு.

அன்னவனை யட்டபின ரிங்கரின் வாய்தலெலா மவுணர் சேனை, துன்னியதா தலினுலே வேற்றுருக்கொண் டேகுதலே துணியா மென்றே, மன்னுமனு வுருவாகிக் கீழ்த்திசைக்கோ புரத்

திருந்தார் வளங்க ணோக்கி, மின்னுபுகழ் மகேந்திரமாஞ் சூரூருட் போயினன்சீர் வீர வாகு. (உ0)

பங்கமுள கொடுஞ்சூர்க்கு முதன்மைந்த னொருத்தரு பானு கோபன், றங்கமுள வக்கினிமா முகத்தோனே யிரணியனுந் துலங்கு பேரோன், றங்கடலவச் சிரவர்கு மற்றுமூ வாயிரவர் தம னின்னோக்கி, வெங்குணமந் திரிதரும கோபன்மனைச் சிகரமிசை மேவி னானல். (உக)

சாற்றியவிங் கிதுநிற்கக் கறையுறுவெஞ் சிறையினிடைச் சய ந்த னென்போ, னேற்றமுள வமரரொடு மவுணர்புரி சிறையதனு விடரின் மூழ்கி, யாற்றமெலிந் தரனைநினைந் தேத்தியயர்ந் திடவறிந் தங் கருண்மீக் கொண்டு, சீற்றமுறு வேற்றடக்கைக் குமரனவன் கனவினிடைச் சென்று னன்றே. (உஉ)

சிந்தைமகிழ் வோடுதொழு தையநீ யாரெனவே திகழு மீசன், றந்தருளு மைந்தனியாந் தன்குறையின் குறைபுகன்றுன் முதை யான, விந்திரன்வந் தெமைவேண்டத் தாரகனைக்கதிர்வேல்கொண் டெறிந்து சாடிச், செந்தினகர் வந்ததனி லிருந்தனமிந் திரனயன்மா றேவர் சூழ. (உங)

வீரவா கென்னுமொரு தூதுவனை யிங்குவர விடுத்து வீரச, சூரனு மவுணன்மக னொருவனொடு பலவவுணர் தொலையச் சாடிச், சீருலா நகரழித்து வரபபுரிந்து நாளையிவண் சேர்ந்து சூர்முற் போருலா மவுணரெலா மைந்திருவை கவின்மாளப் புரிது மாதோ.

பின்புனது திருத்தருது மென்னவவன் றனக்குரைத்துப் பெய ர்ந்து மோகத், துன்பிலுட னுறுமமரர் கனவினிடை மனமகிழத் தோன்றித் தோன்றி, யன்பினொடு சயந்தனுக்குப் புகன்றதுபோற் புகன்றுபுகன் றகன்று போக, வின்பமுறு கனவினைவிட் டெழுந் துதுயர் பொருந்தாம லிருந்தா ரன்றே. (உரு)

வேறு.

கொன்பாவு திறல்கொண்ட குமரேச னமரர்
முன்பாக வந்தேகு முறையிங் குரைத்தா
மின்பான புகழ்கொண்ட வெழில்வீர வாகு
பொன்பாவு நகருடு புரிசெய்கை சொல்வாம். (உசு)

தண்டாத விறல்கொண்டு தருமங்கொல் கொடியோன்
விண்டாவு சிகரத்தின் மிசையின் றிழிந்தே

யெண்டான வர்கள்சூழ விமையோர்கள் சிறைசேர்
கண்டார்கள் பயமேவு களமீ தடைந்தான். (உஎ)

அங்காரு மசுரேச ரதிமோக மாகச்
சிங்கார வேண்மந் திரத்தைச் செபித்தே
மங்காத வமரேசன் மகனோடு மிமையோர்
தங்கா விருந்திட்ட தலமுற் றிருந்தான். (உஅ)

தண்டாத விறல்கொண்ட தலைவன்றன் மேனி
கண்டான் விருப்போடு கரமுந்து சிரமேற்
கொண்டான் வரத்தென்கொல் கூறென் றுரைத்தா
னண்டார்கள் சிறையூ டழுந்துஞ் சயந்தன். (உகூ)

காலகொண்ட விசைகொண்ட கழல்வீர வாகு
வேல்கொண்ட முருகேசன் விடுதூத னீரிப்
பால்கொண்ட சிறைவிண்டு பதமெய்த வேவெங்
கோலகொண்ட சூர்முன்பு கூறற் கடைந்தேன். (ஙo)

இப்பான்மை கேளா திடும்போ ளிருக்கிற்
றப்பாம லிவண்வந்து தசநாள்க டம்மிற்
றுப்பாரு மவுணர்த் தொலைத்தும் பதத்தே
மெய்ப்பாக வைப்பான் விறற்கொண்ட வேலோன். (ஙக)

வேறு.

என்று பற்பல நன்று புகன்றிட வேதி லாத சயந்தனு மண்டருந், துன்று கைக்கம லங்கள் குவித்துநின் றாய செய்கை தொடங்குதி யையவென், றென்று மன்பொ டுரைத்திட வங்கண்விட் டொல்லை யேகியோ ராயிர யோசனைப், பொன்றி கழ்ந்திடு சூரவை மண்டபம் போகி முன்னுள பொன்னுரு வெய்தினன். (ஙஉ)

எய்தி யாயிர யோசனை நீளமு மெள்ளி டம்புரை வெள்ளிடையின்றியே, வெய்ய தானவர் சூழ்தர வீறிலா வீறு லாவு வளங்கள் விளங்குறத், துய்ய மாலை யிலங்கிய மார்பகச் சூர்ம டங்கல் சுமந்திடு மாதனச, சைய மீதுறல் கண்டன னண்டர்சூழ் சண்மு கற்கினி தாகிய தம்பியே. (ஙங)

கண்டு திண்டிறல் கொண்டிடு தோளுடைக் காளை சூரன் கடுந்திறற் சீயமேற், கொண்ட வாதன மீதி ருந்திடக் கொற்ற வேலவ

ஞெற்றெனவோதியான், மண்டலத்திடை நின்றிட நீதெனு வள்ளா றன்னை மனக்க ணினைத்தலு, மொண்டி றற்குகன் மண்டருளால ரோவோரரித்தவி சவ்விடை யுற்றதே. (௩௪)

வந்து மன்னவன் முன்ன ரிருந்திட வாகை கொண்டிடு வாரு மகிழ்ச்சியோ, டெந்தை யாகிய கந்த னளித்ததி தென்று சென்றதி னெய்திய காலையின், வெந்தி றற்பெறு சூரிது கண்டுநீள் வித்தை செய்பவ னென்று வெகுண்டுரைத், தந்து சீருள வீரனை யாரைநீ யோது வாயென வோதுதன் மேயினன். (௩௫)

தேவர் தங்க ளிடுக்க ணகற்றவே செந்தின் மேவி யிருந்திடு கந்தவேள், ளோவி லாவரு டன்னுட னென்னையே யுன்னை மேவியுரங் கிள ரண்டரைப், பாவ மார்சிறை விட்டிட வென்னுறுதி பாரி னீதி பயின்றர சாளுதி, யாவ தீது மறுத்திடின் மாள்வையென் றன்பி னோடு மறைந்திட வேவினன். (௩௬)

என்று கூற மிருந்த சினத்தினோ டீறில் சூர னெனும்பெயர் பெற்றுளோன், மன்ற வாணைகை யின்னு முளைத்திடா மைந்த னோவிங் கெனக்கிது செப்புவா, னன்று நன்றிது பேதைய னுதலா னச்சு ருமொழி நச்சிவந் தோதினு, யின்று நின்னுயிர தந்தன னேகுதி யென்றி யம்பலு மேந்த லியம்புவான். (௩௭)

ஆதி யாகிப் பரம்பர னாகிய வாறு மாமுக வண்ணலைப் பால னென், றோதி னுயவன் மேன்மைகள் கேளெனு வொப்பின் மேன் மை யுரைத்திட வெய்யசூர், காதி யங்கவன் மேன்மைகள் பின்ன ருங் கட்டு ரைக்குதி யென்றய றுன்றிய, தாது லாவு தொடைப்புய வாயிரந் தான வர்க்கிது சாற்றுதன் மேயினன். (௩௮)

ஒற்ற னுகி யடைந்த விவன்றனை யூறு செய்திடல் வீறல வாத லாற், பற்று மின்சிறை யூடுப டுத்துமின் னென்று பாணி பகர்ந்திட வாயிரந், துற்ற தானவர் பற்றிடு வானயல் சூழ வீரன் றுலங்கொரு கையினு, லுற்ற வொன்னலர் சென்னி பிடித்துமண் மீத டித்திட வொல்லை யிறந்தனர். (௩௯)

எந்தை வேலுக் கினியிரை யாகுதி யீது திண்ண மிருந்திடு போவனென், றந்து சீருள வீர னகன்றிட வுற்ற வாதன மொல்லை யெழுந்துநீ, ளந்த ரத்தின் மறைந்து படர்ந்ததா லந்த வேலை யருந் திறல் கொண்டசூர், வெந்தி றற்புனை யுஞ்சது மாமுக வீர னோடு விளம்புதன் மேயினன். (௪0)

ஆதி மைந்தன் விடுத்திடு தூதனிங் காயி ரத்தரை யட்டகல் கின்றனன், காது மன்னவ னுக்கெதிர் கிட்டிநீ கட்டி வாவென்று கைய ளிசைத்தலு, நீதி கொன்ற விலக்கர்க ளோடுபோய் நில்லு நில்லென வொல்லை யியம்பியே, போதும் வீரன் வெரிந்புடை கிட்டலும் பொங்கு கோபம் புரிந்து திரும்பினான். (௪௧)

செற்ற மோடு திரும்பிய வீரனோர் சென்றி லக்கர் இருந்து கரங்களிற், பற்று பல்படை விட்டிட மொய்ம்பன்மேற் பட்டு றுண்டுகள் பட்டன வண்ணலங், குற்ற சூளிகை யொன்று பறித்து நே ரொன்ன லார்மிசை யுந்த விரைந்துபோ, யற்ற மற்ற விலக்கர் கலக்கமோ டாவி விட்டிட வட்டது கெட்டதே. (௪௨)

நூறு கொண்ட பெருந்தலை கொண்டவ னூபு ரத்திடை வந்த வர் மைந்தருள், வீறு கொண்டவன் மீமிசை பல்படை வீச வீரன் விளங்கொர் சிகரியை, மாறு கொண்டு பறித்து விடுத்திட வல்லை யாயிர வாளிக ளேவியே, நீறு கண்டொரு நூறு சரங்கடா னேரி லான்மிசை நீசனெய் தானரோ. (௪௩)

விட்ட வாளிகள் பட்டிட மொய்ம்பினான் வெய்யன் முன்னர் விரைந்து படர்ந்துகைப், பட்ட வில்லைப் பறித்து முறித்திடப் பாவி நூறு கரங்கொடு பற்றலு, மட்டில் வீரப் புயங்கொடு தள்ளியே மார்ப கத்தை மிதித்தொரு தாளினா, லொட்ட லன்றனி நூறு சிரத்தையு மொல்லை தள்ளி யுயிர்கவர்ந் தானரோ. (௪௪)

வேறு.

அட்டது பின்ன ரரும்புகழ் வீரம்
பட்ட புயங்கள் படைத்துள வள்ள
றுட்டர் வெருண்டு தொலைந்திட வங்கோர்
நெட்டுரு வங்கொடு நின்றன னன்றே. (௪௫)

தேவர் வணங்கு திறற்புய வீரன்
பூவடி வங்கொடு பூமிசை நிற்ப
மேவிய வைம்பது வெள்ளம தாகுங்
காவல ரன்னது கண்டு வெருண்டார். (௪௬)

வந்து விரைந்து வளைந்து சினந்தே
பந்தி பொருந்து படைக்கல முந்தக்
கந்தன் விடுத்திடு காளை கறுத்தே
யிந்த வியற்கை யியற்றுத லுற்றான். (௪௭)

அடித்து முறைதத்து மரற்ற வெறிந்தும்
பிடித்துட லங்கள் பிசைந்து பிழிந்தும்
வெடிக்குர லோம்புது வெள்ளமும் விள்ள
முடித்தனன் மொய்ம்புள மொய்ம்புள் வீரன். (சஅ)

அட்ட வதற்பின ரங்கொரு *வேரந்
தொட்டறம் விட்டிடு சூரவை மன்றம்
பட்டிட விட்டுழி பட்டது கண்ணு
லெட்டரு மன்ற மிடிந்தது மன்னே. (சகூ)

தீயவர் ०பண்ணை செறிந்திடு மன்ற
மாய்வது கண்டு வயம்பெறு சூர
னுயிர மொய்ம்புள வாயிரர் தம்மைத்
தூயவ னோடமர் துன்ற விடுத்தான். (ருo)

உந்திடு மாயிர வொட்டலர் கிட்ட
வந்திடு முன்னர் வயம்புனை வாகு
சுந்தர மேவிய சூரன தூரை
யந்தர மாக வழித்திட லுற்றான். (ருக)

மண்டப கோபுரம் வாரி யெறிந்தும்
விண்டு மதிற்றிரள் வீழ வுதைத்தும்
வண்டுறு தண்டலை வல்லை பிடுங்கி
யெண்டிசை யின்கணு மேக வெறிந்தும். (ருஉ)

அங்கிவை யாதி யனேக விதத்தாற்
பொங்கு வளங்கொள் புரத்தை யழித்தே
துங்க விறற்பெறு தூயவ னிற்ப
வெங்குண வாயிர வீரர் தெரிந்தார். (ருங)

தீங்கினர் கண்டு சினந்து வளைந்தே
பாங்குறு மெண்ணில் படைக்கல முய்ப்ப
வோங்கு மராமர மொன்று பறித்தே
யாங்கவர் தம்மை யடித்து முடித்தான். (ருச)

பாத்க ராயிரர் பட்டது கண்டே
தூதுவ ரோடுபு சூரனொ டோதக்
காதியி ருப்பவோர் காதல னன
மாதிறல் வசசிர வாகு வெழுந்தான். (ருரு)

* வேரம்-செய்குன்று. ० பண்ணை-கூட்டம்.

பற்றாறு தந்தை பதங்கள் பணிந்தே
யொற்றனை வென்றிவ ணுற்றிடு கின்றேன்
மற்றெனை யேவுதி வல்லையி லென்னா
வற்றமில் சூரன் விடுத்தன னன்றே. (௫௬)

தந்தை யிருந்திடு சங்க மகன்றே
யுந்திய தன்மனை யூடு புகுந்தே
யந்த மிலாத வடற்படை கொண்டே
சிந்தை மகிழ்ந்தொரு தேர்மிசை யுற்றான். (௫௭)

வேறு.

தேரைஞ் ஞூறு வெள்ளம தாகுந் திறல்யானை
யோரைஞ் ஞூறு வெள்ளம தாகு முயர்மாக்க
ளீரைஞ் ஞூறு வெள்ளம தாகு மெழிஞான்கு
பேரைஞ் ஞூறு வெள்ளம தாகும் பிறசேனை. (௫௮)

இவ்வா றாகுஞ் சேனைக ளோடங் கிருமைப்போர்
செய்வா னுன்னித் தன்னிக ராம்வச் சிரவாகு
மைவாழ் கண்டத் தண்டர் பிரானார் மகனேவுஞ்
செவ்வான் மேனித் தூயவ னேரே சென்றானால். (௫௯)

செற்றா ராகுந் தானவர் ஞானத் திறலோனைச்
சுற்றா நின்று படைக்கல மூந்தத் துகளில்லோன்
குற்றா நின்று முதைத்து மெறிந்துங் கோபத்தோ
டெற்றா நின்றுங் கொன்றன னம்மா விறைதன்னில். (௬௦)

வேறு.

வேறு மனேக விதத்தாற்
சீறி யெதிர்ந்திடு சேனை
யூறு பொருந்திட வூழிச்
சூறை புரிந்து தொலைத்தான். (௬௧)

அங்க ணிறந்தவ ரல்லால்
வெங்கண மாகிய வெய்யோர்
தங்கண் மனங்க டளர்ந்தே
யெங்கணு மாகி யிரிந்தார். (௬௨)

மாதிறல் வச்சிர வாகு
வீது தெரிந்தட லேந்தன்
மீதுற வாயிர வெங்கோ
லூனகை யெனச்செல வுய்த்தான். (௬௩)

வந்த சரங்களை வல்லே
யுந்து கரங்கொ டொடித்தே
சிந்தின னின்றுழி தீயோ
னிந்த வியற்கை யியற்றும். (சுச)

வெம்பதி னாயிர வெய்ய
வம்புவி டக்குக னன்பார்
தம்பி யெழுக்கொடு தாக்கி
மொய்ம்பொடு சிந்த முறித்தான். (சுரு)

வேறு.

முறித்தபி னையிரு மெய்ச்சிர வசிர மொய்ம்புள்ளோன்
மறித்து மரும்பதி னாயிர வாளி மனத்தூடே
கறுத்து விடுத்து மிகுத்த வெழுத்துகள் கண்டேபின்
றெறித்தன னைந்தெனு மாயிர வாளிகள் செய்யோன்மேல். ()

பட்டுழி யோரிறை நொந்து விரைந்து படர்ந்தன்னா
னெட்டிர தத்தை யுதைத்திட வேறொரு நீடேர்மே
லொட்டல னுற்றுழி யவ்விர தத்தையு மொண்கையா
லெட்டி யெடுத்து விசும்பிடை போக வெறிந்தானால். (சுஎ)

தேரொடு வானி லிலக்க மியோசனை சென்றேபின்
பாரில் விழுந்தொளிர் வாளது கொண்டு பகைத்தோர்தம்
மாருயி ருண்டிடு வீரனை நேர வவன்றானுஞ்
சீரிய வாள்கொ டெறிந்து சிரங்கள் சிதைத்தானால். (சுஅ)

அங்கவ னாருயிர் கொன்றவ னின்றுழி யாகாய
வெங்கதி ரோனு மறைந்தனன் மாலையு மேவிற்றாற்
சங்கரன் மாமக னப்பதி யெல்லை தணந்தேபின்
மங்குல் விசும்பு வழிக்கொ டிலங்கையில் வந்தானே. (சுகூ)

அண்டர் வெருண்டிடு மாளி முகத்தவ னப்போதிற்
கண்டன னின்றவ ருன்மக னாவி கழித்தேமுன்
னுண்டவ னிவ்வில னாமென வோது வுருத்தேகி
மண்டு திறற்பெறு சேனைக ளோடும் வளைந்தானால். (எ0)

வீரரில் வீரன் வெகுண்டுறை வானுரு விச்சென்றே
யாரவு ணப்படை முற்று முலாவி யிடும்போதிற்
பாரமு றாயிர வாளி முகங்கள் படைத்துள்ள
னேருற வேதி யடுத்தன னாயிர நீள்கையால். (எக)

அடித்த கரங்களை யங்கொரு பாணிகொ டப்போதிற்
பிடித்தவ னுந்து கரங்கள் சிரங்கள் பெயர்ந்தோடித்
துடித்திட வாள்கொடு வீசி யடற்புனை தோள்வீரன்
வடித்தனி வேல னமர்ந்திடு செந்திலில் வந்தானே. (எஉ)

கந்த னிருந்திடு கோயில் புகுந்து களிப்போடு
மந்தமி லன்பொடு முன்பு வணங்கி யணித்தாய்நின்
றுந்திய சூரன தெண்ணமு மேனைய வுங்கூறி
யிந்திர னோடு சயந்த னிருப்பு மிசைத்துற்றான். (எஙு)

மற்றிது நின்றிட வச்சிர வாகு மடிந்தானென்
றொற்றர்கள் சொற்றுழி வெற்றிகொள் சூரென வுற்றுள்ளோன்
சற்றல வீறிடர் கொண்டொரு மந்திரி தானோது
மற்றமில் புந்தியி னுவிடர் சிந்தி யமர்ந்தானால். (எச)

அங்கது போதினி லப்புற வண்ட மதிற்சேருஞ்
செங்கம லத்தய னைக்கொணர் வித்தடல் சேர்சூரன்
மங்கிய தன்பதி முன்பி னிலங்க வகுப்பித்தே
துங்க விரிஞ்சன கன்றிட வன்பொடு சொற்றானால். (எரு)

அன்னது காலையின் முன்னர் விடுத்த வடற்றூதர்
மன்னிய செந்திலில் வந்தரன் மைந்தன் மருங்குள்ள
கொன்னுறு சேனை வினவி யகன்று கொடுஞ்சூரன்
றன்னை யடைந்து பதங்கள் பணிந்திது னைச்சொல்வார். (எசா)

அற்றம தற்றவி ராயிர வெள்ள மடற்பூதர்
மற்றவர் மன்னவர் நூறுட னெண்மர் வரைத்திண்டோட்
கொற்ற விலக்கரொ டொன்பது வீரர் குழாத்தோடும்
வெற்றி தருங்கதிர் வேலவன் ஞால மிசைச்சேர்ந்தான். (எஎ)

அங்குறு தாரக னென்கிர வுஞ்ச வடற்குன்ற
மங்குற வெஃக மெறிந்துயர் செந்திலில் வந்தோரொற்
றிங்கு விடுப்ப விலங்கை யழித்திவ னெய்துற்றே
பங்கமில் யாளி முகன்றனை கொண்டு படர்ந்தானால். (எஅ)

தெண்டிரை வாவிசம் மாநக ரூடு திறற்கந்தன்
மண்ட லிகத்தொடு வந்தமர் செய்ய மனந்தன்னிற்
கொண்டன னின்னது மெய்யென வெய்ய கொடுஞ்சூர
னெண்டிறல் சேர்தம ரைக்கொணர் வித்துரை செய்கின்றான்.

வேறு.

வானோர் தமைச்சிறையில் வைத்தசெயல் வானோ
ரானோர் தமக்கிறைவ னாதியுட னோதக்
கோனோர் விறற்பெறு குமாரனை யளித்தெம்
மேனோவு செய்திட விடுத்தருளி னானால். (௮௦)

இன்பா ரரன்சுதனி ராயிரவெள் ளஞ்சே
ரன்பான பூதரு மலக்கணி லிலக்கத்
தொன்பா னெனப்படு முரங்கொளிளை யோருந்
தன்பால் வரக்கடிது தாரணியில வந்தான். (௮௧)

வீறான தாரகனை வெற்பொடு தடிந்தே
மாறாத செந்திநகர் வந்ததி லிருந்தே
யாறார் முடிப்பா னளித்தகுக னம்பா
ஊறான தற்றிடுமொ ரொற்றனை விடுத்தான். (௮௨)

அன்னானி லங்கையை யழித்திவ ணடைந்தென்
முன்னா விருந்தெனை முனிந்தே யிகழ்ந்தே
கொன்னாரு மென்பதி குலைத்தே யிளஞ்சேய்
தன்னானி கொண்டுறு சயத்தினொடு சென்றான். (௮௩)

கந்தம் பெரும்பதியி னாளையர னல்கு
மைந்தன் செருப்புரிய வந்திடுவ னென்றே
முந்துந்து தூதுவர் மொழிந்தனர்க ளென்னா
வுந்துஞ் செருச்செய வுசாவின னிசாவில். (௮௪)

அப்போது பற்பல ரனேகவித மோதக்
கைப்போ தமைத்தரி கலந்த தவிசின்கண்
டுப்போ டிருந்ததொரு சூரன்முக நேரே
மெய்ப்போடு சிங்கமுக வீரனிது சொல்வான். (௮௫)

விரைத்தார் மிடைந்திடு வியன்புய வமைச்ச
ரிரைத்தாடல் செய்திடு மிலங்கனிக மன்னர்
வரைத்தாசின் மைந்தர்க டமக்கியலும் வன்மை
யுரைத்தாரோர் புந்தியு முரைத்தில ருனக்கே. (௮௬)

கொன்னார் புகழ்க்குலவு கொற்றவர் செவிக்கே
மின்னா ரழற்கணை விடுப்பது கடுப்ப
வெங்கானு தன்னிலைமை யென்னுமது தன்னைச்
சொன்னா ரமைச்சர்க ளெனும்பெயர்கொ டேயோர். (௮௭)

* வரைத்து என்பது வலித்தல் விகாரம்.

வாலுற்ற தண் ○ புனல் வயங்கிய பயம்பின்
பாலுற்று லாமயிலே பற்றுமிகு மூண்டு
போலுற்ற நண்பொருள் புரிந்துபடு மாபேர்ன்
மேலுற் றிடுஞ்செயல் விளைவுகிலே யந்தோ. (அஅ)

நந்தா வளங்குலவு நாகவுல கோரை
முந்தான காலமதின் மொய்ம்புட னலைத்தோர்
சிந்தா குலத்தினொடு சிந்தினர்க ளல்லா
துய்ந்தா ரொருத்தரை யுரைப்பவிவ ணுண்டோ. (அகூ)

மீனஞ் சுமந்துபுகழ் விண்ணவர்க ளெல்லா
மீனம் பொருந்திட வியற்றினை மகத்தின்
கோனந்தண் மாநகர் குலைந்திட முனிந்தா
யூனந் தருஞ்சிறையி லும்பர்களை வைத்தாய். (கூ0)

நந்தா வளங்குலவு நாகர்சிறை யின்னு
மந்தோ விடுத்திலை யதற்குவடி வேலோன்
வந்தா னமர்ச்செய வரங்கடரு நாளின்
முந்தா னுயர்த்தவன மொழிந்தது மறந்தாய். (கூக)

இக்கால நூறினொடு மெட்டுக மிருந்தெம
மெய்க்காசில் சத்தியில் விளித்திடுதி ரென்று
னக்கால முற்றதிவ ணப்படியி லனரோ
மிக்கான தாரகனை வென்றதுயர் வேலே. (கூஉ)

மின்னுரை வேதியுரை மெய்க்குரவர் தம்மைப்
பொன்னு டரைப்பொறை பொருந்து முனிவோரை
மன்னுசி ருர்தமை வருத்தியவ ரன்றே
வெநாளும் வெந்நரகி லெய்தியுழல் வாரே. (கூங)

ஈண்டாகை யான்முருக னோடம ரியற்ற
வேண்டாவின் னோர்கள்சிறை விட்டிடுவை யாயின்
மீண்டா சுறுங்கயிலே வெற்பினிடை நாகம்
பூண்டான் மகன்கடிதிற் போயிடுவ னன்றே. (கூச)

இன்பான விப்படி யியற்றுகிலை யாகிற்
கொன்பாவு மம்பிகை குமாரனமை யெல்லாந்
துன்பாக வேல்கொடு தொலைத்திடுவ னன்றே
மின்பாவு சிங்கமுக வீ ரனுரை செய்தான். (கூரு)

---

○ புனல் வயங்கிய பயம்பு - தடாகம்.

என்றீது சிங்கமுக னின்புற விசைப்ப
நன்றீது நன்றென நகைத்துநனி சீறித்
தன்றீதி லாதவொரு தம்பிமுக நேரே
யொன்றீது சூர்முத லுரைத்திடுத லுற்றான். (௯௬)

வேறு.

இந்திரன் றனக்கும் பூதர்க டமக்கு மிளஞ்சிறு பாலனே டிமையவர் தமக்கு, முந்துநீ நெஞ்சி லஞ்சினை போலு முமையொரு பாகனு மொப்பிலாக் கடவு, ளந்தனிச் சத்தி வெல்லுமென் றதுவு நாண்முடி விழைத்தது நான்முன்பு கேளேன், புந்தியிற் புதிதொன் றுன்னியே யுரைத்தாய் பொய்மொழி சொல்லவும் வல்லையா யினையால. (௯௭)

அப்படி யுரைத்தா னேனுமக் கடவு ளளித்திடு வரமா ரழித்திட வல்லார், மெய்ப்புறு சத்தி யழித்திடு மென்னில் வேறதோ சத்தியும் விமலனு மதனு, லிப்பெரு வரங்கள் கொடுத்தவ னழியா னெண்ணினு னமரரை யான்சிறை செயக்கண், டொப்பின்மான் முதலோ ரஞ்சியே யிருந்தா ரொருசிறு பாலனே யொழித்திட வல்லான். (௯௮)

என்னவே குகனைப் பாலனென் றெண்ணி யிகழ்ந்துதன் னுயிரை யிழந்திடு கின்ற, முன்னவ னிசைப்பப் பின்னவன் பின்னு முனியலை யொன்றின மொழிவனென் றுரைப்பான், பொன்னுல கமரர் தமைச்சிறை படுத்திப் புவியினி னீதி புரிந்திடா வதனைத், தன்னிக ரான சங்கர னறிந்துன் றன்னைவந் தடுவான் றன்னுள நினைந்தான். (௯௯)

இன்னதீர் வரங்கள் கொடுத்தயா மழிப்ப தியல்பல வாதலா லிருமையே படைத்து, மன்னியே யிருந்த சூரனைப் பிறர்க்கும வதைப்பரி தெனவே மனத்திடை நினைந்து, பொன்னுரு தனதா முருவமா மொருசீர்ப் புதல்வனுப் புகழுறப் பொருக்கென முடிக்கத், தன்னுதல் விழியா லாறுமா முகத்தோர் தனிப்பெருங் குமரனைத் தந்தனன் பரனே. (௧௦௦)

ஆற்றமி லுருவ மாகுவ னருவ மாகுவ னருவுரு வகன்ற, பெற்றிய மாவன் மறைகளுந் தெரியாப் பெரியவன் பெரியர்க்கும் பெரியான், றாற்றிடும் பொருள்க ளனைத்துமா யலவாய்த் தோன்றிய

௧௦௧-வது செய்யுளில், முதன் மூன்றடிகளிலும் ஒவ்வொரு சீர்கள் பிரதிகடோறும் குறைந்தே யிருக்கின்றன.

தனிப்பெருந் தோன்றன், மற்றவன் றனைநீ பரவனென் றுறைந்தாய் வல்லையிங் கவனுன் மாறுநி மாதோ. (௧௦௧)

ஆதலா னீயு நின்பெருங் கிளையு மன்புறு வளர்ந்தோர் டமர்ந் திட வேண்டிற், நீதிலா வமரர் சிறையினை விடுத்தல் செய்யெனு வெய்யவன் சிந்தைதமேற சினமுற், றூதையா லலைபடுங் டங்கியாற் சூடுண் டியர்சர வனத்தலை யுண்டபா லனையோ, சோதியெனு முரைத்தாய் பேதையென் றிகழ்ந்து சொல்லினுன வெவ்வுரைச் சூரனு மவுணன். (௧௦௨)

முற்றுணர் சிங்க முகத்தினு னன்மை மொழிந்ததற் கிழிந் தோன் முனிந்துரைத் திடலுஞ், சற்றுநம் மொழியுட் கொண்டில னந்தோ தலையினில் விதியையார் தவிர்த்திட வல்லார், மற்றிவன மடிதற் றிண்ணமா மதன்முன் மடிதலே கடனென மனத்திடை நினைத்துச், சிற்றறி வுடையேன் சொற்றன பொறுத்தி சேரலார் தமையடச செல்குவ னென்றுன. (௧௦௩)

என்றுவன் றிறல்கொண மடங்கன்மா முகத்தோ னின்புற விசைப்ப விருநதிறற்சூர, னன்றுநன் றெனவே மகிழுநதவன றன்னை நயமொடு புல்லிப புகழுநதுநின னகர்ப்போ, யொன்றுதி குகனீண் டடைந்திடில விளிபய னுலைமே வுதியென றுவப்புடன் விடுப பச், சென்றுதன் புரம்புக் கமர்ந்தன னெவருஞ செலவுரைத் துறை யுட் சேர்ந்துரு ரிருந்தான். (௧௦௪)

இன்னவா றவுணர் தொழுங்கழற கொடுஞ்சூ ரழிவெந் தெழி லினு டினிதுகண் படுக்கும, பொன்னுலாம புரிசை மகேந்திர புரி யிற் புரிந்துவீற் றிருந்தது புகன்றன மன்னே, மன்னுமா லயன்முன் னிமையவர் வணங்க மடங்கலந் தவிசின்மேல் வனசமா னிகைமே, லன்னம்வாழ் கழனிச் செந்தின்மா நகர்வா முறுமுகத் திறைசெய லறிவுற வறைவாம். (௧௦௫)

மூன்றாவது

மகேந்திரகாண்டம்

முற்றிற்று.

---

ஆ. செய்யுள்—௫௱௰௫.

வேலுமயிலுந் துணை.

சிவசண்முகன் றுணை.

நான்காவது

# யுத்தகாண்டம்.

## முதனாட் பானுகோபன் யுத்தம்.

மின்னெரிகர் சடிலத் தவிர்மதி முடித்த வித்தகன் படத்தக விழி விழித் தாங்குப், பொன்னுறு மருணத் தடமலர் மிடைந்த பொதும் பர்சூழ் தயவான் பொருப்பின தும்பர், துன்னுசெங் கிரணத் திர விவந் தெழலுந் தோகையோ டருங்குடைத் தோன்றன்முன் றோன்று, கன்னல்விற் றடக்கைக் கடவுண்மாண் டதுபோற் கது மென வழிந்தது காரிருட் கங்குல. (க)

இவ்வகை யுலகிற் றுணங்கற லகல விரவியா மொருவன்வந் திருவிசும் பெழலு, மொய்வள ரவுணப் பேரிருண் மடிய முருக னும் பரிதியு மரவெனு மெழுந்து, செவ்வொளிக் கனகத் தேரின் மேற் புகுந்து சேனையோர் வானுளோர் செறிந்துசூழ்ந் தேத்தப், பௌவநீர் கடந்து சூரன்மூ தூரிற் பாங்குறு வடதிசைப் பால டைந் தனனே. (உ)

அங்கணவ் வமையத் திமையவர் புனைவ னறுமா முகமுடை யண்ணறன் னருளாற், கொங்கல ரிருங்கா மருமகுசூ ழேம கூட மாம் பெயருடைக் கோநகர் குயிற்றச், சங்கரன் மதலை கொடி நெடுந் தடந்தேர் தணந்துசீர் மந்திரத் தணைந்தது தன்னிற், பொங் கெழின் மடங்கற் சேகரத் திடையே பொருந்திய வணைமேற் பொருந்திவீற் றிருந்தான். (௩)

### வேறு.

வீறுகொண்ட தானையோடு மேன்மைகொண்ட வேலவ
னீறில்பா சறைத்தலத்தி னிந்தவா றிருப்பவீ
றூறிலாத் சூரன்முன்ன ருற்றுநா ரதன்சொலச்
சீறியின்ன தொற்றரோடு செற்றமோடு சொற்றனன். (ச)

வாரிமன் னவற்பிடித்து வாருமென்ன வேகியே
கோரமோடு பற்றிமூற் கொணர்ந்திடச் சினந்துநீ
வீரமோடு மாறுகொண்டு வீறுகொண்ட தெவ்வரைச்
சேரவிங்கு விட்டதென்னை செப்புகென்று செப்பினான். (ரு)

அந்தவேலை வேலைமன்ன னமரரோடு குமரவே
ளுந்துவானி னேகினு னுயர்ந்தபூத ரென்கணே
வந்திடக் கலங்கினேன் மலங்கினேன் வருந்தினேன்
பந்திகொண்ட பூதர்தம் பரட்டினுக் கமைந்திலேன். (சு)

ஏழையேன் றடுப்பதெங்ங னென்றுகூறி நின்றிடத்
தாழ்விலாத வொற்றர்வந்து சண்முகக் குமாரவேள்
வாழுநம் பெரும்பதிக்கு வடதிசைக்க ணெய்தினன்
சூழ்பதாதி யோடுமென்று சொல்லவீது சொல்லினான். (எ)

இரவியைத் தளைந்துளானை யிங்கழைத்தி ரென்னலும்
பரவியேகி யொற்றர்சொற்ற பானுகோப னைத்தரச்
சிரமொரைந்தன் மைந்தனோடு சேனையோரை வென்றுநீ
விரைவிலிங்கு வருதியென்று விடைகொடுப்ப வேகினான். (அ)

ஆங்குதன் மனைக்கணுற் றடற்படைக் கலங்கள்கொண்
டேங்குறாத தானைவெள்ள மிருபதான வாயிரம்
பாங்கினோடு பாங்கினிற் பரந்திரைந்து சூழவே
நீங்கிலாத விசயனுதி யனிகமன்னர் சேரவே. (கூ)

கரதுகங்கண முப்பதான வாயிரங் கலந்ததோர்
சுந்தரஞ்செறிந்திலங்கு துய்யவைய மேறியே
வெந்திறற் பெருஞ்சமர்க்கு மேவுகின்ற வாறுகண்
டுந்துநா ரதன்குகன்க ணுல்லைவந்து சொல்லினான். (கO)

எந்தையான கந்தவே ளிலங்குவீர வாகுவாஞ்
சுந்தரன் றனைத்தெரிந்து சூரனிவ் விடத்தியாம்
வந்தவா றுணர்ந்துதன் மகன்றனைப் பதாதியோ
டுந்தவேலை நம்மொடே செருத்தொடங்க வேவினான். (கக)

சேனையான துன்றவின்று சென்றுவென்றி யொன்றிநீ
யூனமின்றி வருதியென் றுவப்பினோ டுரைத்தலு
மானனங்க ளாறுகொண்ட வண்ணலைத் தணந்துபோய்த்
தூலங்கொள் படைகள்கொண்டு துய்யவைய மேறினான். (கஉ)

சுந்தரங்கொ ளெண்மருந் துலக்கமா மிலக்கரும்
வெந்திறற்கொள் பத்துநூறு வெள்ளமான பூதருந்
தந்திரங்கொள் சுப்பிராதி தானைமன்ன ருங்குழீஇ
வந்திசூழ வேகினான் மகிழ்ச்சிவீர வாகுவே. (கங)

தலைமைக்கொண்ட பாசறைத் தலத்தினைத் தணந்துபோய்
நிலைமைகொண்ட சூரனூரி னெண்மதிற் புறத்துறத்
தொலைவில்பூத ருஞ்சினங்கொள் சூரன்மைந்த னணிகளும்
பலபடைக்க லஞ்சொரிந் தெதிர்ந்துபோர் பயின்றவே. (கச)

தெண்டிரைக்கு நேரெனத் திரண்டிரண்டு சேனையு
மண்டியோதை செய்துநின் றடுஞ்செருப் புரிந்திடச்
சண்டமுற்ற வவுணருஞ் சலந்தரித்த பூதரு
மண்டுசோரி வாரிநேர மட்டிலார்கள் பட்டனர். (கரு)

மேனலங்கொள் பூதர்தாம வெகுண்டுசென்று மேவலா
ரானையோடு மானைதன்னை யாளியோடு மாளினைச
சேனையான தேரினோடு தேரைவாரி மோதலு
மூனமுற்ற வவுணர்தா முடைந்துவாடி யோடினார். (கசு)

அற்றவேலை யவுணர்தம்பி லனலியென்னு மன்னவன்
செற்றமோடு வந்தெதிர்ந்து தீதிலாத பூதர்மேல்
வெற்றிகொண்ட கணைகள்சிந்த வெந்திறற்கொள் பூதரு
ளொற்றசிங்கன் முனிவினோடு மொல்லைசென் றெதிர்ந்தனன். (கஎ)

மிண்டுகொண்ட வனலிதேரில் விரவிநின்ற புரவியைத்
தண்டுகொண்டு மோதலுந் தளர்ந்திறப்ப வெய்யவன்
கண்டுகோல் சொரிந்திடக் கனன்றவன்றன் வையமுற்
றண்டலன்கை விற்பறித் தடற்கொள்சிங்கன் வீசினான். (கஅ)

அற்றமற்ற சிங்கன்மீதி லனலிதண்டின் மோதலும்
வெற்றிகொண்ட சிங்கனங்கண் வெய்யன்மார் படித்தலைப்
பற்றிநின்று சுற்றிநற் படித்தலத் தடித்திடத்
தற்றுநின்ற வவுணருடு சண்டனீது கண்டனன். (ககூ)

கண்டசண்ட னிவனென்று கழறும்வேலை சிங்கனைவ்
வண்டலன்றன் வையமுற் றவன்றடம் புயத்தின்மே
லொண்டிறற்கொள் கண்டயின் மோத வவனுமாங்கு சிங்கன்மேற்
றண்டின்மோத விருவருந் தளர்ச்சியெய்தி வீழ்ந்தனர். (உ0)

மற்றிவ்வேலை யவுணர்தம்மின் மாயனோடு பூதரிற்
செற்றமுற்ற நீலனான சீலனங் கெதிர்ந்துநீ
னாற்றதண்ட முந்தமாய வூன்றுமார்பில் வந்துபட்
டிற்றுளா னெனக்கலங்கி யிந்தவா றியற்றுவான். (௨௧)

நீலன்மீது சூலமொன்று நீசன்விட் டிடப்படச்
சாலவே வருந்திநின்று தக்கமாயன் முன்புபோய்க்
கோலமார்பின் மீதுபாணி கொண்டுமோதி யண்டர்தங்
காலனைப் பிடித்தவன் களத்தினிற் கழித்தனன். (௨௨)

கண்டமீது விண்டிடக் கடித்திரத்த முண்டுயிர்
கொண்டபோது சண்டனோடு கோதில்சிங்க னங்கெழுந்
தொண்டிறற்கொ டண்டுகொண் டுருத்தெழுந்து சிங்கனவ்
வண்டலன் கவுட்கரத் தடித்தனன் முடித்தனன். (௨௩)

அன்னகாலை யவுணர்தம்மி லசமுகத்த னணுகவே
மன்னுகின்ற பூதர்தம்மின் மதுவெதிர்க்க வஞ்சகன்
மின்னுனைச சரங்கள்சிந்த வெய்யன்வைய மீதுபோ
யொன்னலன் கலங்கவேலை யோதைபோ லொலித்தனன். (௨௪)

ஆர்த்தபோதி லசமுகத்த னயர்வதாக வனைனைதப்
பார்த்துவீர னல்லையுய்ந்து போகெனப் பகர்ந்துநீள்
சீர்த்திகொண்ட மண்ணிடைத் திரும்பவல்லை நில்லெனா
வார்த்தைபேசி வந்தெதிர்ந்து மதிமுகத்த னிதுசெய்வான். (௨௫)

மையிலாத பூதன்மீது வன்சரம் பொழிந்திடக்
கையினால் விலக்கல்செய்து கையன்முன்பு சென்றவன்
கொய்யுளைச் சகட்டினைக் கொதித்தெடுத்து வேலையிற்
றுய்யன்வீச வையமீது துண்ணெனக் குதித்தனன். (௨௬)

குதித்துவந்து பூதன்முன்பு கூடிமற் றொழிற்செயப்
[illegible]த்தினா லுரத்தொடம் பரத்தின்மீ தெறிந்திடக்
[illegible] மேவியே [illegible] மகனின்மேற்
[illegible]த்துமான்ய யான்[illegible] கொடியநேமி விட்டனன். (௨௭)

தந்திரங்கொண் [illegible] மீது தகர்முகத்தன் விட்டிடும்
வெந்திறற்கொ டிகிரிதான் விரைந்துசென்று பூதனங்
குந்துநின்ற [illegible] [illegible] திரும்பியே
வந்துதீயன் [illegible] மாலிப்பக் [illegible]. (௨௮)

ஆயகாலை யவுணர்மன்ன ரனிகமோடு மணுகலா
லேயபூத ருடையவே யிலக்கர்மேவு தண்டகன்
போயெதிர்ந்து பல்லவம் பொழிந்தழிப்ப வீதெலாந்
தீயசூரன் மாமகன் றெரிந்தெதிர்ந்து வந்தனன். (௨௯)

வந்தெதிர்ந்த குறளினோர் மடிந்துடைந் திடச்சரஞ்
சிந்திமுந்தி வந்திடச் சினத்தினோடு முக்கிர
னுந்துசூரன் மைந்தன்முன்ன ருற்றவன்ற னதுதே
ரந்தரத்தின் மீதுபோக வங்கெடுத் தெறிந்தனன். (௩0)

நண்ணுதேரி னோடுபோனு நாடுமட்டு மேகியே
மண்ணின்மேல் விழுந்துசென்று வன்றிறற்கொ ளுக்கிரன்
றிண்ணமுற்ற வங்கமீது செங்கையா லடித்துநீள்
விண்ணின்மீ தெடுத்தெறிந்து வேறுதேரி லேறினான். (௩௧)

காசிலேழு லோகமுங் கடந்துபின்ன ருக்கிரன்
வீசுசீர்கொள் படியின்மேல் விழுந்தனன் கிடந்தன
னேசிலாத தண்டிநீ டிருமபினாகி யேனையோர்
பூசலான வெந்தொழிற் புரிந்திரிந்து போயினார். (௩௨)

ஈதுகண் டிலக்கர்வந் தெதிர்ந்துகோல் சொரிந்தவன்
றீதுகொண்ட தேரினைச் சிதைப்பவேறு தேரின்மே
லூதைபோல வாவியின் றுறுஞ்சரங்கள் கோடிவிட்
டேதமற்ற வீரர்வில் லிலக்கமுந் துணித்தனன். (௩௩)

விற்றுணித் தளப்பில்வாளி வீரர்மே லழுத்தலு
மற்றுநே ரிலாவிலக்கர் வாடியஞ்சி யோடினா
ருற்றவிச் செயற்றெரிந் துரங்கொள்வீர கோளரி
செற்றமோடு மெற்றனைந்த தியன்முன்பு வந்தனன். (௩௪)

வந்தளப்பில் கோல்சொரிந்து வஞ்சன்விட்ட கோலெலாஞ்
சிந்தியாயி ரஞ்சரஞ் செலுத்திவெய்யன் மார்பையங்
குந்துசா ளரம்படுத்த வுள்ளநொந்து மாயவன்
வெந்திறற் படைக்கலத்தை வீரன்மீது வீசினான். (௩௫)

வீசலுற்ற படைவிரைந்து மேனியுட் பொருந்தலு
மாசிலாத வீரனும் மயங்கியே விழுந்தன
னேசில்வீர பானுவந் தெதிர்ந்துவெய்யன் வையமுற்
றோசைநாணி விற்பறித் தொடித்தெறிந்த வெல்லையின். (௩௬)

தூயவீர னாகமீது சோரிநீர் குதித்திட
மாயவஞ்சன் வாளினால் மனஞ்சினந்து குத்தலுந்
தீயன்மீ தணிந்தவச சிரக்கவச மற்றிட
வேய்வில்வீர பானுவு முரத்துவாள் செலுத்தினான். (௩௭)

சூரன்மைந்த னுட்சினந்து தூயனெற்றி குத்தலும்
வீரபானு வீழவே வெகுண்டுவீர ராந்தகன்
கோரமோடு வந்தெதிர்ந்து கோல்களா யிரங்கடேய்
வாரமோடு மவுணனிட்ட மவுலியங் கறுத்தனன். (௩௮)

வேதன்முன் கொடுத்தவேலை வெய்யன்விட் டிடப்படப்
போதநொந் தயர்ந்தனன் பொருந்திமற்றை யைவருந்
தீதினா னொடுந்தனுச செருப்புரிந் துடைந்திடக்
காதல்வீர வாகுவீது கண்டுசென் றெதிர்ந்தனன். (௩௯)

தீதில்வீர வாகுவைத் தெரிந்தெதிர்ந்து தீயவன்
வேதனல்லை மாலுமல்லை வேலினானு மல்லையோர்
தூதனீய னோடுபோர் தொடங்கவல்லை கொல்லெனா
மாதிறற் பரித்துயர்ந்த வாகுவீது கூறுவான். (௪0)

வீரம்வீரர் சிறிதுமே விளம்புவார்கொ லோவெனச
சூரன்மைந்தன் முனிவுகொண்டு சோனைமாரி மானவெங்
கோரவாளி தூவலுங் குவட்டைவென்ற மொய்ம்பனு
மேருலாவு கணைசொரிந் திருஞ்செருப் புரிந்தனன். (௪௧)

மண்ணிலோடு மெட்டதான மாதிரத்தி லோடுநீள்
விண்ணிலோடு நீலவேலை மீதிலோடு நேமியின்
கண்ணிலோடு மண்டமுன்பு கடிதிலோடு மீனுமா
லெண்ணிலாத வண்மைகொண்ட விருவரேறு மிரதமே. (௪௨)

சூரன்மைந்தன் விடுசரங்க டெய்யவன் றடுத்திடப்
வீரவாகு விடுசரங்கள் வெய்யவன் றடுத்திடு
[illegible] விந்தவா றருஞ்சமம் பொழிந்துநீ
டரமேவு மிருவருஞ் செருப்புரிந் துலாவினார். (௪௩)

வெந்திறற்கொள் வீரன்விட்ட விசிகமாரி சிந்திவன்
கந்தவாகை வாகுவின் கரத்துவில்லை வல்லையங்
கந்தமற்ற சூரன்மைந்த னுயிரஞ் சரங்களாற்
சிந்தவே துணிப்பவீர னிந்தவாறு செய்குவான். (௪௪)

பின்னுமோர் நெடுந்தனுப் பிடித்தொரா யிரஞ்சரந்
துன்னவே விடுத்தவன் றுலங்குவிற் றுணித்தபோ
தன்னவெய்யன் வேறுவிற்கொ டாயிரஞ் சரங்கடாம்
மன்னிரும் புகழ்ச்சிவீர வாகுமேல் விடுத்தனன். (௪௫)

விட்டபோது வீரவாகு வெஞ்சரங்க ளேழினு
லொட்டலன்றன் மவுலிதள்ளி யொல்லைபத்து நூறுகோ
ளொட்டுவெய்ய னரணமுந் துணித்திடத் துலங்கிய
மட்டில்சீர்கொள் பரிதிகண்டு மண்டுமோகை கொண்டனன். (௪௬)

கோரமான வாயிரங் கொடும்பெருஞ் சரங்கடாம்
வீரவாகு நெற்றிமீது வெய்யன்மைந்த னெய்யவே
சோரியுண் டழுந்திடத் துலங்குசெங் கரத்தினு
லீருமம் பினைபறித் தெறிந்துவீர னிதுசெய்வான். (௪௭)

சித்திரங்கொள் பானுவைச் செயிர்த்தவீறு சேவகன்
வத்திரத்தி லாயிரம் வயங்கொண்மார்பி லாயிர
மெத்துதோளி லாயிரம் விரர்கரத்தி லாயிர
மத்திரங்க ளொல்லைசென் றழுந்துறத் துரந்தனன். (௪௮)

கந்தனெந்தை யிளவல்விட்ட கடியவாளி கொடியவன்
வெந்திரர்கொ ளங்கமெங்கும் விரவியங் கழுந்தலால்
வந்துவந்து சோரிமூட வாடிநொந்து கந்துகப்
பந்திகொண்ட தேரின்மீது பானுகோப னின்றனன். (௪௯)

அன்னபோதி லீதுகண்ட வன்றனூது சேனையோர்
மன்னுவீர வாகுமுன்பு வந்தெதிர்ந்து போர்செயத்
துன்னுவிற்கொள் வாளிகொண்டு துற்றசேனை முற்றவுஞ்
சின்னபின்ன மாகவே செறுத்துவின் றறுத்தனன். (௫௦)

பின்புமுன் புடைந்திறந்த பெருகுபூத ரியாவருந்
துன்பிலா விலக்கருந் துலக்க[illegible] வெண்மரு
மின்பமா மகிழ்ச்சியோடு மீடி[illegible]வே
மன்பெரும் புகழ்ச்சிவீர வாகு[illegible]னர். (௫௧)

துற்றசோப மற்றபின்னர் சூரன்மைந்தன் வீரனோர்
செற்றமோ டெதிர்ந்துநூறு நூறுகோல் செலுத்தியே
வெற்றிமொய்ம்ப னேறுகின்ற வீறுதேரை நூறலும்
மற்றுமோர் சகட்டில்வீர வாகுவல்லை வாவினுன். (௫௨)

வாவிநூறு நூறுகோலில் வஞ்சகன்கை வில்லுடன்
மேவுகின்ற தோளழிப்ப வேறுதேரி லேறிவெம்
பாவிமற்று மோர்தனுப் பரித்திரா யிரஞ்சரந்
தூவிவீர னாகமீது தோயவங் கழுத்தினான். (ருங)

ஆகமீது பகழிவந் தழுந்தவீர வாகுவுஞ்
சோகமங் குணர்ந்திரேழு துங்கவாளி தூவியே
மாகர்தெவ்வன் வில்லொடித்து வாளியா யிரங்கடா
மேகவிட்டு வெய்யனேறு மிரதமுங் கெடுத்தனன். (ருச)

மற்றுநூறு வாளிகொண்டு மார்பைவாயில் செய்யவோர்
வெற்றிவையம் வெய்யனேற வீரவீரன் விசிகமங்
குற்றவா யிரந்துரந் துரந்திறந்த நெறியினாற்
றுற்றிடுஞ் சிலீமுகங்கொ ணேணியங் கறுத்தனன். (ருரு)

இந்தவாறு கண்டுவில்லி னிவனைவெல்வ தரிதெனா
முந்துபாறு வைத்தளர்ந்த மொய்ம்பன்வீர மொய்ம்புசே
ரந்தவீர னாகியான வாருமோக மாகவே
வெந்திறற்கொண மோகமான வேல்விடுத்து நின்றனன். (ருசா)

வந்தவந்த வேலினான் மயங்கிவீறு பூதரு
முந்துசி ரிலக்கருமு முரண்பொருந்து மெண்மருங்
கந்தனேவு தூதனுந் தளர்ந்துகந்தி னிற்றலு
மந்தமற்ற கணைகள்சிந்தி யவருருந் துளைத்தனன். (ருஎ)

ஆயகாலை முருகனீ தறிந்தமோக வேல்விடுத்
தேயுமோக வேலழிப்ப வேறுலாவு வீரரோ
டோய்வில்வென்றி மொய்ம்பனுங் குளந்தெளிந்து தானவன்
சேயின்மீதி லாதிவேல் செலுத்துமா றெடுத்தனன். (ருஅ)

கண்ணுதற் பரன்படைக் கலந்தொடுக்கின் மாய்வுறப்
பண்ணுமென்று வந்துவேல் பரித்துவந் திலேனெனா
வெண்ணிமாய மாயொளித் திருக்கவெய்ய னேகலும்
விண்ணினின் றகன்றருக்கன் மேல்கடற் படிந்தனன். (ருகூ)

நண்ணலன் கரந்துபோன செய்கைதன்னை நாடியே
திண்ணமுற்ற தண்டமோடு திண்டிறற் புயத்தினான்
றானெனத் திரும்பியே துலங்குவெற் பெயர்ந்தவேற்
பண்ணவன்றன் முன்பணிந்து பாசறைக்கண் மேவினான். (சுo)

வேறு.

இந்த வாறிவ ணின்றிட விரவியம் பகைஞன்
புந்தி தன்னிடை யளவிலாப் பெருந்துயர் பொருந்த
நொந்தி ருந்தன னிவையெலா மொற்றர்போய் நுவல
வந்த வேலையி லறிந்தனன் சூரனு மவுணன். (சுக)

அறிந்த தானவ னோயான் படையொடு மணுகிச்
செறிந்த சேனையும் பெருங்கிர வுஞ்சமாஞ் சிலம்பை
யெறிந்த வேற்படைக் குமரனுஞ் சமரிலவந் தெதிர்ந்து
மறிந்தி டும்படி பொருவனென் றுன்னியே வதிந்தான். (சுஉ)

வண்டு லாவரும் வண்டுழாய் மிலேச்சிய மவுலித்
திண்டி றற்பெறு மரியுரத் திலங்கிய திருப்போ
லெண்ட விர்ந்தவெண் சீகரச் சாகரத் திடையே
சண்ட வெங்கதிர் பரப்பிவந் தெழுந்தனன் றபனன். (சுந)

கந்த மாமலர்ப் பொதும்பர்சூழ் கமலைமா நகர்வா
ழெந்தை ஞானசம் பந்ததே சிகன்றனை யெதிர்ந்தார்
பந்த வாணவப் படலம்விண் டிரிந்திடும் படிபோ
லந்த ரம்புவி மறைத்தபே ரிருளகன் றதுவே. (சுச)

---

## இரண்டாநாட் சூரபன்மன் யுத்தம்.

அன்ன காலையி லிலக்கவெள் ளம்படை யணுகத்
துன்னு சீரசு ரேந்திர னுடனதி சூர
னென்ன நின்றிடு தம்பியர் மைந்தரா மிருவர்
மன்னி டும்படைத் தலைவரா யிரதமேல் வரவே. (சுரு)

சீர்பு ரிந்திடு மொருபெருந் தேரின்மேற் றிறற்சூ
ரூர்பி ரிந்துபோர் புரிந்திட வருதல்கண் டோடிக்
கூர்பு ரிந்திடு குலிசவேற் கரத்தினன் கூற
வேர்பு ரிந்திடு குமரவே ளறிந்தன னிதனை. (சுசு)

அறிந்து மாருதச் சாரதி யியற்றுதே ரணுகிச்
சிறந்த சீருள விளையவ ரிரதமேற் செல்லப்
புறந்த ராதவீ ராயிர வெள்ளமாம் பூதர்
செறிந்து சூழ்ந்திடத் தானவன் படைக்கெதிர் சேர்ந்தான். (சுஎ)

சேர்ந்த காலையிற் பூதரு மவுணருஞ் சினங்கொண்
டார்ந்த பற்பல படைக்கலஞ் சொரிந்துகின் றூர்த்து
நேர்ந்து கிட்டியன் கிருஞ்செருப் புரிந்தனர் நெடுஞ்சீர்
தார்ந்த சாரதரின்னண பின்னர்செய் தனரே. (சுஅ)

ஆயி ரம்பெருந் தேரினைக் கரங்களா லள்ளி
யாயி ரங்கரி கெட்டிட மோதுவ ரதற்பி
ஞயி ரங்கரி பாணிகொண் டெற்றியே யடற்பத்
தாயி ரம்பரி யழிவுறப் புரிகுவ ரடலால். (சுகூ)

கோடி வெம்பரி பாணிகொண் டாயிரங் குலவுங்
கோடி யாகிய வவுணரை யடித்துயிர் குடித்தார்
வாடு ருவிறற் றகுவரும் பூதரை வளைவுற்
றீடு சேர்ந்திடு பற்பல படையினு லிறுத்தார். (எ0)

வீறி வந்திடு தானவ ரானவர் வெகுண்டு
சீறு சாரத ருடல்பதை பதைத்திடச் சிதைத்த
வீறி லாவிறற் பூதமன் னவர்தெரிந் தெதிர்போய்
மாறு றும்படி தானவர் தானையை வதைத்தார். (எக)

பிணங்கள் சோரிவெற் பாறுபோன் மேவுறப் பெருஞ்சீர்க்
கணங்க டானவர் கணஙகளை யடுதிறங் காணூஉ
விணங்கு சீரதி சூரன்வந் தறுமுக னிருதாள்
வணஙகு பூதர்மேற் பொழிந்தனன் பகழியா மாரி. (எஉ)

அந்த வேலையிற் பூதரி லுககிர னணுகித்
தந்தி மாமுகன் முன்னவன் சுதன்மிசைத் தண்டொன்
றுந்த வுந்துமக் கதையதி சூரன துரத்து
வந்து * சாலிகை சிந்திய தவுணர்கண் மயங்க. (எங)

மூடு சாலிகை சிந்தலுஞ் சிந்தையுண் முனிந்து
பாடி லுக்கிரன் மீதுநூ றாயிரம் பகழி
கூட விட்டுழிக் குருதிநீ ரொழுந்தது கொதித்தோ
ரீடு வெற்புவிட் டவுணர்கோன் றேரினை யிறுத்தான். (எச)

மற்றோர் கைவயமேற் பாய்தலு முக்கிர வலியோன்
செற்ற மோடுதேர்ப் பரிகளை யுதைத்திடத் தீயோன்
றற்று நூறுகோல் விடுத்தலு நெடியகைத் தடியா
லிற்றி டும்படி விலக்கவே றிரதமே றினனே. (எரு)

வேறு.

ஏறி நின்றவதி சூர னுக்கிரனை யீறு செய்வனென, வெண்ணி
யே, சீற் னற்படை யரும்பு னற்படை இறற்ச மன்றனை து இன்ன

* சாலிகை - கவசம்.

படை, வீறு கின்றதொரு காலி னுந்துபடை மின்ப டைத்தவிதி தன்படை, மாற ஞெண்படை விடப்பி டித்துடல் வருந்து ருதவை யருந்தினன். (எசு)

விட்ட விட்டபடை முற்று முற்றுதிறன் மிக்க வுக்கிரன் விழுங்கலுங், துட்ட னைவதி சூர னுதிபடை தொட்டி டப்பரனை யுக்கிர, னிட்ட மோடுதொழு தஞ்செ ழுத்தினை யியம்பி நின்றிடலு மெந்தைதன், னெட்டி ரும்படை திரும்பி முக்கணுடை நின்மலன் புடை யடைந்ததால். (எஎ)

ஈது கண்டரி முகத்தன் மாமக னிலங்கு தேரினு மிறங்கியே, கோது செய்யுமொரு தண்டு கொண்டுமிகு கூளி மன்னனெதிர் கூடிவண், போது கொண்டதொடை கொண்ட தோண்மிசை புடைப்ப வக்கதை பறித்தவன், றீது கொண்டவுர மீத டித்துமி சிறந்த தொல்லுயிர் துறந்தனன். (எஅ)

இன்ன வாறது தெரிந்து நெஞ்சக மெரிந்து தானவர்க ளிந் திரன், மன்னு பூதர்கள் பதைத்து மாளும்வகை வாளி சிந்தியெதிர் வந்தபோ, தின்ன லற்றருறண் மன்ன ரிற்கனக னென்னு மன்னவ னெதிர்ந்துநின், றன்ன வஞ்சனொடு போர்பு ரிகதிடலு மாயி ரங் கணை விடுத்தனன். (எகூ)

மெத்து மத்திர முருத்த னிற்பட மெலிந்த னன்கடிது வீறு முன், மத்த னென்பவ னெதிர்ந்து போர்புரிய வஞ்ச னெண்ணில் பல வாளிதூஉ, யெய்த்தி டும்படி யிளைப்ப மந்தனெதி ரெய்தி வெய்ய சமர் செய்திடப், பத்து நூறுகணை சிந்தி மந்தனு மயர்ந்தி டக்கடிது பண்ணினன். (அ0)

வீறு சிங்கனது பின்பு முன்பணுகி வெஞ்செ ருப்புரிய வஞ்சக, னூறு வெங்கணை விடுப்ப வன்னவனு நொந்து நின்றிடலு முந்துசீ, ரேறு சாரதர்கண் மன்னர் பின்னுளரி யானி ரும்பொரு திளைத்திடச், சீறி வந்தன னிலக்கர் தம்மிலுயர் திண்டிறற்குலவு தண்டகன். (அக)

ஞாச கன்றன்மகன் வத்தி ரத்திலுயர் தண்ட கன்கணைக ளாயி ரம், வீர மோடுவிட நொந்து தந்திதரு வெய்ய னெண்கணைக ளெய்யவே, சீரு லாறுதல் படப்பெ ருந்துயர் செறிந்தி டக்கடிது சோமுகன், கோர மோடணுகி யாயி ரங்கணைகள் கொண்டு தேர ழிவு கண்டனன். (அஉ)

தேர ழிந்திடலு மானை மாமதலை சீறி வேறிரத மேறியே, வீர மோடுவரு சோழு கன்றன்மிசை ‡ வென்றி யோர்படை விடுப் பவன், கேரு லாவுமவ லுந்த ளர்ந்தன னிலங்கு சிர்விசயன் வந்துகீ, டார கன்றன்மகன் வில்லை வல்லைகணை யாயி ரங்கொடு தடிந்தனன்.

கொண்ட வில்லழிய வந்தெ திர்ந்துபொரு கொற்ற வீரன் விறல் பற்றலன், கண்டு தண்டது விடப்ப டத்தளர் கலக்க முற்றன னிலக்கரி, லண்டு மேனைய ரடைந்து விற்சமர் புரிந்து டைந்திடலு மாசிலா, மண்டு வீரமுள கந்த னுக்கிளவல் வந்து வெய்யனொ டெதிர்ந்தனன். (அச)

கைத்த னுத்தனை வளைத்து மெத்திய கடுஞ்ச ரஞ்சிதறி வெய் யவன், மைத்த னுத்தனை மறைப்ப வன்னவனு மன்னு மாயிரநல் வாளிதான், சுத்தன் மீதுபட விட்டொ ரேழுகணை தொட்டு விற் றடிய விற்கொளாப், பத்து நூறுகணை சிந்தி வெய்யனுறு தேரை வில்லொடு படுத்தனன். (அரு)

வேறு தேரவுண னேறி விற்கொடுயர் வீர வாகுவுறு தேரினை, நூறு கோலதனி னூறுகா லதனி னூபு ரத்துவரு சேவகன், மாறிலாவிறல்கொள் பாவி தேரினிடை வாவி மேவுதிறல் வாளினூற், பேற தாமொரு கரந்து ணித்துழி பிடித்த தண்டுகொ டடித்தனன்.

ஊறில் வீரனவு ணன்சி ரத்திடை யுதைத்து மீளுதலு மொன் னலன், சீறி வாள்கொடு தொடர்ந்து வந்துழி திரும்பி யங்கவனை வாளினூ, னூறி னனவுண ரஞ்சி யோடினர் நுவன்றி டற்கரிய சிரினல், வீறு சூரனிது கண்டு பூதர்குழு மீது வெம்மையொடு மேவினன். (அஎ)

மூந்தி வந்துயர் தனுக்கு னித்தனன் முழுமகு நாணொலி வழங் கலுஞ், சிந்தி னார்சில ரிரிந்து ளார்சிலர் திகைத்து ளார்சிலர் செகத் தின்மே, லிந்த வாறுமிகு பூதர்நொந் தனர்க ளியாண்டு பத்துட னிரண்டுதா, னந்த நாணொலி யொழிந்த தில்லையெனி லாற வன்றன் விறல் கூறுவார். (அஅ)

இன்ன செய்கைதனை மன்னு சாரத விராசர் கண்டவ ணெதிர்ந் தயோ, தன்ன வஞ்சனொரு பத்து நூறுதொட ராயி ரந்தழுவு கோடியா, மின்னல் வெங்கணை பொழிந்த போதவ ரழிந்த போது நல் விலக்கராம், வெந்நி டாதவிறல் வீரர் வந்தணுகி வெந்தி றற்கணை கள் சிந்தினர். (அகூ)

‡ வென்றி ஓர்படை - வெற்றியையுடைய வேல்.

ஆடல் கொண்டவ சூரக்க ரந்தனு வனைத்தை யுங்கணைக ளாயி ரங், கோடி சிந்தியவை சிந்தி யத்தொகைகொள் கோல்விடுத் தவர்க ளேடரெலாம், பாடு றும்படி புரிந்தி லக்கமொடு பத்து நூறு செறி பல்லவ, யீடி னேடுதவி வீரா மேனிக ளிளைத்தி டுமபடி துளைத்தனன. (கூ0)

ஈது கண்டுதிற லெண்மர் தங்களி லிருந்தி றற்பெறு திவா கரன், நீதி லாதகணை சிகதி வந்திட லு நூறு நூறுகணை சிந்தியே, யோதுவீரனது விற்று ணித்தவ னுரமபி ளந்துழி விழுந்தனன், கோதி லாவிற லரக்கன் வந்தவுணர் கோவின் முன்புகணை தூவி னன். (கூக)

தூவி யங்கதனில் வென்றி யின்றிமிட றுன்று வாளினொடு சூரர்கோன், மேவு தேரனுறு வில்லெ வெட்டவவன் வில்லொ டிந்த திலே வல்லேயே, யோவி லாதகிர் வாளொ டிந்ததட லுந்த ரக்கனே யொர் தாளினற், பாவி யண்டமிசை செல்ல வுந்தலும் விழுந்த னன்கடிது பாரின்மேல். (கூஉ)

வீழு மன்னதை வெகுண்டு கண்டுமிகு வெற்றி பெற்றிடு மகேந்திரன், ருழ்வி லாவிறலகொள் சூரன் முன்புபல சாய கஞ்சி தறவெய்யவன், சூழு நூறுகணை தூய னங்கமிசை தோய விட்டுழி விழுந்தனன், வாழ்வு கொண்டபுகழ் வீர திரனெதிர் வந்து பல் கணைகள் சிந்தினன். (கூ௩)

ஈடு சேரவரு வீர தீரன்மிசை யேறி னேடவுண னேழு கோல், கூட விட்டுழி விழுந்த னன்கடிது கொறற முற்றிடும கேசனு, நீடு சூரனெதிர் வந்தெ திர்ந்தொரு நெடும்ப டைக்கலம் விடுப்பவே, பீடு கொணடவுர மீது பட்டுமிகு தூளி பட்டது பிறங்குவேல். (கூச)

வந்து பட்டகதிர் வேல ழிந்திட லு மன்னு தானவர்கண் மன் னவ, னுந்து கின்றகணை யேழு விட்டிட வுரம்பொ ருந்திய மகேச னீள், கந்து றழ்ந்திடு புயங்க லந்துடல் களைப்ப மொய்ம்பது துளைப்பவே, சிந்தை நொந்தன னிகழ்ந்த விச்செயலை வீர கோளரி தெரிந்தனன். (கூரு)

கண்டி தண்டர்புகழ் வீர கேசரி கடுஞ்ச ரஞ்சிதறி வந்துபின், பண்ட லன்றனது வைய முற்றுர மடிக்க வேகரம் வெடிக்கவே, மண்டு சூரனொரு கைசி னவிலனை மாலு றுங்கடலில் வெஞ்சினன், கொண்டெ றிந்திட விழுந்து பின்னரு மெழுந்து சேனையொடு கூடினன். (கூசு)

மால்ப டைத்தவிற லிந்தி ரன்குறுகி வன்க மன்படை விடுத்த லும், பால்ப டைத்தமொழி மாயை மைந்தன்மிசை பட்டு மட்டி றுக ளாகவெங், கோல்ப டைத்தவ னாருயி ரங்குலவு கோடி, வெங்கணைக ளேவலுங், கால்ப டைத்தவிசை போல மேவிய கலந்து ளைத்திட விளைத்தனன். (கூ௭)

மன்னு வெற்றிபுனை யந்த கன்கடிது வந்து பல்கணைகள் சிந் தலும், மன்ன வன்கணை விலக்கி வெந்தகுவ னுயி ரங்கணைக ளால வன், மின்னு தேரினொடு விற்று ணித்துமரு மமபி ளந்திட விழுந்த னன், வெந்நி டாதவிறல் கொண்ட வண்டர்புகழ் வீர வாகுவிது கண்டனன். (கூஅ)

கனத்த தேரினொடு வந்தெதிர்ப்பவது கண்டு மாயைதரு கண் டகன், மனத்தி லொற்றனென வுன்னி யின்னமுமென் முன்ன ரொற்றனென வந்தியே, லனத்த மெய்திலை தனுப்பி டிக்கிலுன தாவி கொண்டிடுவ னென்னவே, சினத்த பாவிமக னுவி கொண் டதிற லாள னின்னமொழி செப்புவான். (கூகூ)

உற்ற தூத னு மமைச்சு மாகுவ னுரங்கொ டெவ்வர்மிசை செல்குவன், வெற்றி வேலுடைய கந்த னெந்தையருள் வேறு முள்ளபணி செய்குவன், மூற்றும வல்லவனி யான மர்ப்புரிதி யென்ன வொன்னலன் முனிந்துநீள், கொற்ற வாளிகளொ ராயி ரங் குலவு கோடி வீரனெதிர் தூவினன். (க00)

வீர வாகுவு மளப்பில் வெங்கணை விடுத்து வெய்யன்விடு வெய்யகோல், சேர நூறியொரு நூறு கோனுதல் செறித்தி டக் கணை சிதைந்திட, மூரி சேரவுண னெட்டு வெங்கணைகண் மொய்ம் பன் மொய்ம்பிடை யழுத்தலுஞ், சோரி யுண்டுபிடர் தன்னை யன் னவை துளைத்த வும்பர்களி னங்கவே. (க0க)

வென்றி கொண்டபுய வண்ணல் பின்னர்பல வெய்ய கோலவு ணன் வையமேற், றுன்றி யொன்றுபல பாக ரங்கமிசை சோரி கண் டிட வழுத்தல்கண், டன்று காசிப னளித்த தானவனு ரைம்ப தொண்கணையின் மொய்ம்பினு, னின்ற தேரதனை நூற வேறுமொரு நீடு தேரின்மிசை கூடினன். (க0௨)

கூடி வாயுவொடு தேயு வின்படை கொடுஞ்ச மன்கதிர் நெடும் படை, யீடு சேர்வருணன் வாடு ருதிருதி யிந்தி ரன்படை யிலங்கு சீர், சூடு வேதனொடு மாத வன்படை தொடுத்து மொய்ம்பினன் விடுத்திடப், பாடில் சூரன்மிசை வந்து வந்தவைகள் பட்டு மட்டி றுகள் பட்டவே. (க0௩)

மட்டு லாவுதொடை யண்ண லங்கதுயின் மங்கை பங்குடைய வள்ளறன், னெட்டி ரும்படை விடுப்ப வன்னபடை நேரிலா விறல் கொள் சூரனும், விட்டு மொய்மபொடு விலக்கி யாறினொடு வீறு மொன்பது விறற்சரந், தொட்டு வீரனது கைத்த லச்சிலை துணித்த னன்றருவர் துள்ளவே. (௧0௪)

மூண்ட கோபமொடு மொய்ம்ப னங்கொரு முரண்கொள் வேலினை விடுத்தலு, மாண்டு சூரன்மிசை பட்டு வல்லையி லழிந்து போகுதலு மன்னவன், பூண்ட வன்மையொரு தண்ட முந்தவது வந்து மார்பிடை புகுந்திட, வீண்ட சோரியொடு நீண்ட தேரின் மிசை வீர வீரனும் விழுந்தனன். (௧0௫)

செய்கை யின்னது தெரிந்து தேரினொடு சேரு றுஞ்சர வணப் பெயர்ப், பொய்கை தன்னிடை வளர்ந்த நங்கடவுள் போயெதிர்ந் திட வழுத்தினர்க், குய்கை தந்தருள் குமார வேள்வடிவ முற்று நோக்கிமிகு செற்றமாய், நைகை கொண்டதொழில் கொண்ட வஞ்ச னிது நம்பி ராெனொடு விளம்புவான். (௧0௬)

உன்ற னொடுவரு சேனை யானவ ரொழிந்து போயின ருவர்க் கெலாம், வென்றி கொண்டவிறை யாகி வந்தவனும் வெந்துயர்க் கொடு விழுந்தன, னின்றி ளங்குமர னென நீகொலம ரென்னொ டேபுரிய வல்லைகின், வன்றி றற்றனை யழிப்ப னிங்கொரு கணத்தி னொன்றனன் மறத்தினன். (௧0௭)

வஞ்ச னீதுசொல வேளு ரைப்பனிள மைந்த னென்றெமை மதித்தனை, நஞ்சு லாவிய களத்த னெற்றிவிழி நண்ணு கின்றபொறி யொன்றுகாண், விஞ்சு கின்றவுல கங்கெ டுப்பது விவேக மற்ற வொரு பேதைநீ, யஞ்சு றுதகிறல் வீரர் பாலர்பெரி யோர்க ளென் றுமதி யார்கள்காண். (௧0௮)

யாவ ரேனுமமர் செய்ய வந்திடி லெதிர்ந்து போர்புரிவ ரிங்கி னிச், சேவ கத்தொடு பெருத்த நின்வலி சிறுத்த நம்பெரிய திண் மையுா, லோவ றும்படி கெடுப்ப மென்றிட வுருத்த எப்பில்கணை யொன்னலன், றாவ வேலவனு மெண்ணணில் வெங்கணை தொடுத்து விட்டவை தடுத்தனன். (௧0௯)

தடுத்து வேள்முருக னேழி ரண்டுகணை தான வன்றனது தோளின்மேல், விடுத்த போதுகணை பட்டொ டிந்துவிழ வேறு மாயிரம் விறற்சரந், தொடுத்த வன்சிலை துணிப்ப வஞ்சனொரு

துங்கவேல்விடவு மேழொடேழ், வடித்த வெங்கணையி லந்த வேலை யுறவந்த வேலை யெதிர் சிந்தினன். (ககO)

வீறு கின்றதொரு வில்லெ டுத்தவுணன் வேலன் விட்டபல கோலெலா, நூறி யேழ்கணை புயத்தி லெய்பவவை துண்டு கட்படலும் வேலவன், சீறி யையிரு சரத்த வன்சிலை சிதைத்தொ ராயிரநல் வாளியா, லேறு தேரழிய நூறி வேறுமவ னேறு தேர்களற வெய்தனன். (ககக)

வண்மை கொண்டசிலை வைய மற்றிடலும் வைய முற்றவுணர் மன்னவன், றிண்மை கொண்டதொரு முத்த லைப்படை செலுத்த வீரிரு சரங்கள்விட், டுண்மை கொண்டகுக னன்ன தைக்கடிதுருத்த றாத்துமிகு கோல்கடேய்த், தண்மை கொண்டதொழில் கொண்ட வன்புனை மதாணி யானவை தடிந்தனன். (ககஉ)

ஈது கண்டவுண ராரு மங்கணுறுகி யெந்தை கந்தனை வளைந்து நின், றேது போர்புரிய வாழி வேலன்விட வுற்ற சேனையவை முற்றவுங், கோது றும்படி கெடுத்து மற்றது குமார வேள்கையுற வெய்ய சூர், வேதன் மால்படை விடுப்ப வேலவை விழுங்க வாதிபடை விட்டனன். (ககங)

விட்ட வெம்படை குமார வேளொரு விறற்க ரங்கொடு பிடித்தவன், கெட்டி டாதவகை புந்தி சிற்சில கிளத்த வங்கதை மதித்திலன், மட்டில சேனையொடு பின்பு சேர்துமென மாய மாகிமனை யேகலும, பட்ட சோகமொ டயர்ந்த யாவரு மெழுந்து வேலனயல் பாவினுர். (ககச)

மற்றிவ் வேலைமிகு பூதர் சூர்நகர் வடாது வாசறனி லேகியங், குற்றி ருந்தவதி சூர னைப்படை யொடுங்கெ டுத்தெயி லுடைத்துவிண், டுற்றி ருந்ததொரு கோபு ரங்கடிது தொட்டு வேலையிடை யிட்டனூர், சற்ற மித்தனர் திரும்பி னுர்கடிது சண்மு கத்தனயல் கூடினுர். (ககரு)

வெந்தி றற்கொண்மிகு சார தக்குழுவும் வீர ரும்புடையின் மேவவே, யெந்தை கந்தனுயர் பாச றைப்பதியி லேகி மந்திரமதெய்தியே, சிந்து ரப்பகை சுமந்து நீடொளி திருந்தி டுந்தவிசிருந்தன, னந்த ரம்படி யிருண்டி டும்படி யருக்கன் மேலகடலனடந்தனன். (ககசு)

நலந்தி ருந்துமரு ணக்க திர்க்கமல நாய கன்கடிது வந்தெனைக், கலந்தி ருந்தவ னகன்று போனசெயல் கண்டு நீதிமுறை கொண்டிடா, துலம்பு ரைந்தபுய விந்து வென்னையுற வுன்னி வந்தன னெனுநினைந், திலங்கு மம்பர மடந்தை நக்கென வெழுந்த தாரகை யினங்களே. (கக௭)

ஓடி யுற்றசெய லொற்றர் சொற்றிட வுணர்ந்து பானுவை முனிந்துளா, னீடு தந்தையிடை வந்து முறபக னிகழ்ந்த வச்செய னிகழ்த்தியின், நீடு கொண்டவரை நாளை வென்றிடுவ னென்ன வன்னவன் விடுப்பநீண், மாட மாளிகைகொள் வீட டைந்ததனில் வைகி வைகறை யெழுந்தனன். (ககஅ)

## மூன்றுநாட் பானுகோபன் யுத்தம்.

எழுந்து மாயைதனை முன்ன முன்னனுகி யேது வேண்டு மென வோதலு, மிழிந்த வன்புதல்வன் முன்ன மென்னுடம ரெய்தி வென்றவனை யின்றுநா, னழிந்தி டும்பரிசு வெல்ல வோர் படை யளித்தி யென்றிட லுமார்வமே, பொழிந்த மாயையொரு மாய வெம்படை கொடுத்து விண்ணினிடை போயினுள். (ககசு)

அன்ன வஞ்சனது பின்னர் பின்னுள வடற்ப டைக்குல மெடுத்துநீண், மின்னு தேரனுகி யைமப தாயிரமென் வெள்ள மான படை சூழவே, மன்னு மப்பதி மதிற்பு றத்தனுகி மாவின் மாமுக மோ ராயிரந், துன்னு தூதன்வத னமெதி ரிந்தினைய வாசகங்கடிது சொல்லுவான். (கஉ0)

வீர வாகுவெதிர் சென்றி யானிவண் விரைந்த டைந்தது விளம்பியே, போரி யற்றவவன் வந்தி டும்படி புகன்று மீள்கென வகன்றுபோய்ச், சீரு லாவிவளர் பாச றைப்பதி செறிந்து வீரனை யறிந்துகண், டீர மற்றிடு மனத்து வெய்யவ னிசைத்த வாசக மிசைத்தனன். (கஉக)

இயம்பு போதுகதி ரைத்த ளைந்தவனை யின்று கொல்லவரு மேனெனைப், பயம்பொ ருந்துவகை தூத னோடிவை பகர்ந்து விட்டிளைய ரோடுநீள், வயம்பொ ருந்துகும ரேசன் முன்பணுகி வந்த னைத்தொழில் புரிந்துபின், னயம்பொ ருந்துவிடை கொண்டு சென்றுகவி னண்ணு தேரின்மிசை நண்ணினன். (கஉஉ)

கொன்னு றுந்தனது சேனையோ டணிகொள் கோயில் பாசறை யகன்றுபோய்ப், பன்ன ரும்புகழ்கொ டெவ்வ னின்றிடு

பறந்தலைக்கள மடைந்திட, வின்ன லற்றமிகு பூதர் தானவரெ திர்ந்து வெஞ்சம ரியற்றினர், மன்னு பூதரொடு வெய்ய தானவர்கள் வல்லை சிற்சிலர் மடிந்தனர். (கஉ௪)

தான வத்தலைவ ராருமவீரமுறு சார தத்தலைவர் யாவரு, மீன மற்றிடு மிலகக ரெண்மரு மெதிர்ந்து வெஞ்சம ரியற்றவே, யூன முறறவ ரிறக்க வெறபகைவ னுந்து தேரினொடு வந்திட, மான முற்றதிறன் மொய்ம்ப னுமகடிது வந்து தேரினொ டெதிர்ந்தனன்.

அற்ற வேலைதனி லுற்ற வில்லினை வளைத்தி லங்கு *பிறையா சுகம், வெற்றி மேகமென நாகர் தெவ்வன்விட வீறு கொண்ட தொரு விலலினை, மற்று நேரிலகும ரன்ப தத்தினை வணங்கு வீர னும வணங்கியே, துற்றி டுமபிறை நெடுஞ்ச ரமபல தொடுத்து நேருற விடுத்தனன். (கஉ௫)

காரி லேகுவன விண்ணி லேகுவன கஞ்ச னோடரி கலந்துவா, மூரி லேகுவன பாரி லேகுவன வுந்து சீகர முலாவுமுந், நீரி லேகு வன வெற்பி லேகுவன நீள்வு கொண்டபுக முண்டமுன், சீரி லேகு வன தூய வன்றனொடு தீய வன்றனது செய்யதேர். (கஉ௬)

சைய மொத்தவவர் வைய மிந்தவகை சாரி வட்டம துலாவ லும், வெய்ய னுயிர நெடுஞ்ச ரஞ்சிதறி வீரன் மார்பிடை யழுத்தி டத், துய்ய னுயிர மெனுமபெ ருங்கணைக டேவி வென்றியுறு சூரம கன், செய்ய தேரதனை நூற வேறுமொரு தேரின் மீமிசை செறிந் தனன். (கஉ௭)

செறிந்து வில்லினை வளைக்கு முன்னருமை செம்ம லுக்கிளைய சேவகன், முறிந்தி டாதகணை யாயி ரமகொடவன் மொய்மபு ரந் துளை படுத்தலும், பிறிந்தி டாதவிற லும்பர் வேல்கொடு பெருந்தி றற்புனை திருந்தலன், மறிந்தி டுமபரிசு வெல்வ னென்றவுணன் வாரு ணப்படை விடுத்தனன். (கஉ௮)

மேயு மப்படையை வீர னங்கிபடை விட்டழித்திடலு மொட் டலன், வாயு வின்படை விடுப்ப மொய்ம்பனொரு மாசு ணப்படை விடுப்பவே, போயு ரத்துவரு வாயு வின்படையை யுண்டு வந்தத னெதிர் போந்து, மாய னூர்திபடை தீய னுந்தவெதிர் வந்தவெம் படை முறிந்ததே. (கஉ௯)

உந்து நந்திபடை பின்பு மொய்ம்பன்விட வூதை போலது விரைந்துபோய், வந்த காருட நெடும்ப டைத்திறலை வல்லை சிந்துத

---

* பிறை சூசுகம் - அர்த்த சந்திரபாணம்.

லும் வஞ்சக, னந்த கன்படை விடுப்ப வங்கதையு மட்ட தொட் டல னயன்படை, வெந்தி றற்கொள விடுப்ப நந்திபடை முன்பு வந்தது விளிந்ததே. (௧௯௦)

மிக்க வெற்பகைவன் மாய வன்படை விடுப்ப நந்திபடை முன்புவந், தக்க ணம்பொரலு மாடன் மொய்ம்புடைய வண்ண லங்கது தெரிந்துபின், றக்கன் வேள்வியை யழித்த வன்படை விடுப்ப மால்படை தகர்ந்திட, நக்க ஞர்படை யெடுத்து வெந்தகுவ னண்ணலார் வெருவ விட்டனன். (௧௯௧)

முரண்ட ரும்புயனு நம்பன் வெம்படையை மொய்ம்பி னேடு விட வங்கெதிர்ந, திரண்டு வெம்படையு நீள்பெ ருஞ்சம ரியற்றி விட்டவரை யெய்தவே, திரண்ட கந்தினை புரைந்த தோளுடைய தீயசூர னரு டையவ, னரண்ட ருந்தனது மாயை யாலிலகு மம்ப ரத்திடை யொளித்தனன். (௧௯௨)

ஆய போதுகதி ரோன்ம றைந்தன னருந்தி றற்குலவு தான வன், மாயை தன்படை விடுப்ப வள்ளன்முத லான சேனையை வளைந்துமா, லேய வேகடிது கட்டி யேகியினி தாய நீர்க்கடலி விட் டிடக், தீய ரிற்பெரிய தீய னயகது தெரிந்து நெஞ்சக மகிழ்ந்தனன்.

மகிழ்ந்து தாதையுறு கோயி னண்ணியவன் வன்ன வொண் கழல் வணங்கியே, நிகழ்ந்த வாறுதனை யோத வன்னவ னிறைந்த வார்வம துறைந்திடப், புகழ்ந்து மைந்தனை யவன்ற னுதுமனை புக் கிருந்திட விடுத்தன, னிகழ்ந்தி டாநெறிகொ ளுர தன்குமர வேண்மு னுற்றிவை யிசைத்தனன். (௧௯௪)

அற்ற வேலைதனி லாறு மாமுக னடற்கொள் வேல்விட வளக் கர்வாய், வெறறி வேல்கடிதி னுற்று மாயையை விலக்கி யேகவடல் வீரனுங், துற்ற யாவரு மெழுந்து வந்தணிகொள் சூர னூரையெ திர் கண்டபின், கொற்ற மேவுகும ரேச னுக்கிளைய காளை யின்ன மொழி கூறுவான். (௧௯௫)

கூர்ந்து மாயைகொடு வென்று சென்றவொரு கள்வ னைத்தலை யறுத்தலா, லூரந்த ருங்குமர வேண்மு னேகில னுரைத்த வீது மூடி யாதெனி, லிருந்தி டேனெனது வில்லு நாணுமெரி யெய்து வேனென வியம்பியே, விரிந்த சேனையொடு சூர னூரரண மேலை வாசலிடை மேவினன். (௧௯௬)

அங்கி ருந்தபுலி மாமு கன்பொரு தழிந்தி டக்கனலின் வாயு
வின், றங்க வெம்படை செலுத்தி வாணகர் தொலைப்ப வும்பரை
யலைப்பவன், மங்கு லேழையும் விடுப்ப வங்கவைகள் வந்து மாமழை
சொரிந்துநீள், வெங்க னற்றனை யழிப்ப வன்னசெயல் வீர வாகு
வெதிர் கண்டனன். (கஙௗ)

---

## மூன்றுநாளிராத்திரி இரணியன் யுத்தம்.

### வேறு.

கண்டான் வெகுண்டான் வடவைப்படை விட்ட காலை
விண்டா னிறைந்த புயனீர்தனை யுண்ண வீழ்ந்து
தண்டா மூகிற்கள் கடலோடிய வீது தன்னை
யண்டார் புகழுந் திறற்றூதர் ருரோ டறைந்தார். (கஙஅ)

அப்போது சீறி யமாககேசுவ னென்ன வங்கண்
டிப்போடி லங்கு மறையாயிர மோர்ந்த தூயன்
மெய்ப்பான சூரன் மகனுட னென்று மேலோ
னிப்போது கேளென் றவன்றாள் பணிந்தி திசைப்பான். (கஙகூ)

வில்லார் கனகத் திருநாடதி னுற்ற விண்ணோர்
பல்லோர் தமையாரு சிறை செய்தது வீறுபாவ
மல்லா தூநன்றி படுமோவவர் தம்மை வென்ற
தெல்லார் நயநப் பெருமான்வர மன்றி யாதே. (கசo)

ஏறுற்ற தேவ னெடுமாறுகொண் டார்க ளெல்லா
மூறுற் றிறந்தா ரிருந்தார்தமை யோத வுண்டோ
மாறற்ற செல்வ மளித்தோன்மகன் மேவின் மாறு
மாறற் றவனைப் பணியாதமர் செய்ய லாமோ. (கசக)

மன்னு குகனம் பிழையாலமர் செய்ய வந்தான்
பொன்னுட் டமரர் சிறைவிட்டவன் முன்பு போந்தங்
கென்னு யகனே கொடியோம்பிழை யெண்ண லென்றே
சொன்னு லறுமா முகன்மீண்டிடு மென்று சொற்றான். (கசஉ)

ஈங்கீது பால னுரைசெய் திடும்போ திடும்போன்
றீங்கான கோப முடனேசில வார்த்தை செப்ப
வாங்காதன் மைந்த னறியேன்பிழை யெண்ண லண்டார்
நீங்கா விறப்ப வமர்செய்குவ னென்று நின்றான். (கசங)

இன்பாகி வெய்யோ னனையான்றனை யேவ வேகிக்
கொன்பாவு தன்னி லனுகிப்படை யான கொண்டு
மின்பாவு நாலா யிரவெள்ளவெஞ் சேனை மேவப்
பொன்பாவு பூத ருறுசெம்புல முன்பு போனான். (கசச)

வேறு.

o மூச்சிர முள்ளவன் வச்சிர முள்ளவன் மொய்ம்பினன் மூன்
பினன் மூரணுறு மிரணிய, னச்சமில் சேனைவெள் ளத்தைநாற்
றிக்கினு மாயிர மாயிர மாகவே யேகவிட், டெச்சமில் குடதிசைச
சேனையோ டேகினு னீடுசேர் வீரனு நால்வகைத் திக்கினு, மெச்சு
தன் றானையைப் பொரவிடுத் தவுணர்கோன் மேவுறுந் திக்கிலே
மேவினன் றானுமே. (கசரு)

சாரதத் தானையுந் தானவத் தானையுந் தங்களிற் போர்செயச்
சண்முகற் கிளையவன், றிரமுற் றிரணியன் றன்னொடும் வந்தவெஞ்
சேனையிற் பல்லவச் சோனையைச சிந்தியே, கோரமுற் றடுதனுந்
தகுவர்கோ னுயிரன கோல்விடுத் தாயிரங் கோடியாய் நீடிய, பாரி
டச் சேனையைப் பாரிடத் தேயடப் பாங்குறும் பூதர்தா மேங்கியே
யோடினார். (கசசு)

சாரதற் கிறையவ னிலனும் பேரினான் றானவன் முன்புபோய்த்
தானவன் மேவிய, தேரெடுத் தம்பரத் தெறியவே தேரொடுஞ்
சென்றுமீண் டடுதனுஞ் சிலனு நீலனு, நேருறச் சினமொடே மாக
மேல் வேகமாய் நில்லுநில் லென்றுபோய் நீசன்மா மைந்தனைப்,
பாரமெய்த் தாளினு லுருளவே யுதையவே பாரின்மேல் வீழ்த்த
லும் பாய்ந்தனன் மேனிமேல். (கசஎ)

தன்பதத் தாலவன் றனைமிதித் திடுதலுந் தாழ்ந்திடும் விறலி
னன் வீழ்ந்திடுஞ் சோரியன், றன்புடைத் தாகியோர் மேனிதன்
போலவே தாஞ்சுறு விஞ்சையாற் றோன்றுவித் திடுதலு, நன்புகழ்ப்
பூதனுங் கண்டதைச் சாடவே நனிதொடர்ந் திருபத நலியவே
மெலியவே, மன்புகழ்த் தேர்மிசைத் துயரகன் றேறினன் வாளிபூ
தன்மிசை வஞ்சனுஞ் சிந்தினன். (கசஅ)

---

o மூச்சிரமுள்ளவன் வச்சிரமுள்ளவன் மொய்ம்பினன் முன்பினன் மூரண்உறும் இரணியன் என்பதற்கு - மூன்று சிரங்களையுடையவனும், வலியவச்சிரம்போலுள்ள புயங்களை யுடைமையால் வச்சிரவாகுவெனப் பெயர்பெற்றவனது மூத்தவனுமாகிய வலிமைபெற்ற இரணியன் எனப் பொருள்கொள்க.

